உ

ஓம்

குமரன் துணை

# திருச்செந்தூர்,

# ஸ்ரீ

# சுப்ரமண்ய சுவாமி கோவில்



# கொடிமரக் கவி
# வில்லடிப் பாட்டு

தூத்துக்குடி அச்சியந்திரசாலை

(காப்பி ரைட்.)

] 1924 [அணா 5

உ

ஓம்

திருச்செந்தூர்

ஸ்ரீ சுப்பிரமண்ய சுவாமி கோவில்

# கொடிமரக் கவி

# வில்லடிப் பாட்டு

முன்னோர்களாலியற்றிய

இஃதை

திருச்செந்தூர்

ஒளிமுத்துப்பண்டிதர் குமாரரும்

பெங்கழூர்

இராமசாமிப்புலவர் மாணாக்கரில்

ஒருவருமாகிய

**சுப்பிரமணியப் பண்டிதரால்**

நன்றாய்ச் சீர்திருத்தப்பட்டு

நூதன இராகதாளங்களை யமைத்து

தூத்துக்குடி ஷாப்புக்கடை

க. ரா. முத்தையா பண்டிதர்

முயற்சியால்

தூத்துக்குடி அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



இதன் விலை] 1924 [அணா 5

உ

ஓம்

குமரன் துணை.

---

திருச்செந்தூர்

# ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோவில்

# கொடிமரக்கவி

# வில்லடிப்பாட்டு.

---

## கணபதி துதி.

### விருத்தம்.

பாலைநேர் மொழியாள்வள்ளி பங்கனுஞ்செந்தூர் கந்தன்
ஆலயத் துவசக்கம்பத் தன்புதுக் கதைதனைப் பாட
காலையிலிரவிபோல கையி லங்குசபாசஞ்சேர
வாலைவிக்நேசர் செந்தாமரைப் பதங்காப்பதாமே.

### துதி. சந்தம்.

பூமருவுசெங்கமல மாமருவுகோனும்
புத்திரனுமன்பொடுசென் மித்தமலரோனும்
காமருவுமிந்திரனு மீமருவுவோனுங்
காணவரிதானசபை வானருள் சிறந்த
நித்தனெனுந்தில்லைநகரத் தலத்தின்மேலே
நின்றுநடனம்புரிய வன்றுகந்தசோதி
சத்திசிவமாயெழுந்தான் புத்திரனுத்தோன்றுந்
தந்திவதனன்பொன்னடி வந்தனஞ்செய்தேனே
ஆலகாலவிஷத்தையுண்ட நீலகண்டன்மகனே
ஐங்கரனேஎந்தனது பங்கிலுறைவாயே
சேலின்விழிவல்லபையைப் பாலிடம்வைத்தோனே
சித்திவிநாயகாவுந்தன் பத்திமறவேனே

ஏடுமகாமேருமொரு கோடெழுதக்கோனு
மின்பழுறத்தான்படைத்த தும்பிமுகத்தோனே
ஆடுமயில்வாகன்வள்ளி கூடுமைவிசாக
னந்திவண்ணன்பாலனுயர் செந்திலவடிவேலன்
நந்தினத்திரழ்தவழுஞ் சந்தவரைமேவும்
நன்னதித்துறைவிளங்குஞ் சன்னதிக்குவந்தே
சந்தனக்கொடிமரமுன் வந்தகதைபாட
தன்னருள்புரிந்துனது கண்ணருள்செய்வாயே
புத்தகம்விடா தழைத்த கைத்தலமின்னேவெண்
பூவிலுறைவாயெனது நாவிலுறைவாயே
அத்தர்சிவக்கொழுந்தீசர் சித்தமகலாத
வானந்தவல்லியரோமெஞ் ஞானந்தந்தருள்வாய்
குற்றமில்லாக்கொடிமரமுன் னுற்றகதைபடிக்க
குஞ்சரிவள்ளிகணவா செஞ்சொல்லருள்வீரே
உற்றவுமைகாற்சிலம்பின் ரத்னமின்னுரீன்ற
வொன்பதுவீரரேசற்றுந் துன்பில்லாதுகாப்பீர்
பண்டரவின்மேலேபள்ளி கொண்டபெருமானே
பைந்தமிழ்பாடக்கிருபை வந்துதருவீரே
அண்டர்பணிசெய்யவந்த கண்டஐயனாரே
ஆசுகவிபேசுவனென் மாசுதவிர்ப்பீரே
தாவயிலுகந்தன் நண்ணம் மாவெயிலுகந்த
தாயேகிருபையருள்புரி வாயேகதைபாட
மாவயிரமானரத மேவிருந்துவாழு
மரகதவல்லிக்கொடியே யுரைதமிழ்விள்வாயே
கத்தரெந்தன்குலமுழுதுங் கொத்தடிமைகொண்ட
கந்தர்துசக்கம்பமது வந்தகதைசொல்ல
அத்தருடன்வாதாகவே நித்தநடஞ்செய்நட்
டாறுகொண்டதேவிதமிழ் கூறவந்திடாயே

விருத்தம்.

கடிகமழ் ரூபத்தாரோன் கந்தவேள் சன்னதிக்கு
கொடிமரத் துடன்தோச்சுங் கொணர்ந்திடுங் கவிதைபாட
அடியவர்க் கிரங்கிப்பாத மரவிந்த மோக்ஷமீயும்
படியுதுங் தெய்வீர்நீங்கள் பண்புட னருள்செய்வீரே.

வேறு சந்தம்.

சிவபாதவிர மதையர் தவபாலருருவான
திருஞானசம்பந்த னிருபதமும்
தவமாளிகைசஞானி யவள்மீதுபுணர்கள்வர்
சடையார்சேயவன்றெண்ட ரடியிணையும்
சிலைமேருசிவனுரை விலையாகத்துதிபாடும்
திருநாவுக்கரசரின் பெருங்கழலும்
தலைமாலையீஸ்பரன்மேற் கலைதிருவாசகம்சொற்
றமிழ்வாதவூரா தூ கமழ்பதமும்
வாழடியவர்க்குள்ள ஆளானகுருசைவ
மாளிகைமடத்தையர் தாளிணையும்
ஆழ்வலிப்பலத்தாலெங் நாளாகநாவில்துதித்
தோதிச்சிரத்திலேற்றிப் பாதிவணங்கி
கஞ்சப்பிரமனைமுன் னஞ்சச்சிறையிலிட்ட
கடவுள்கந்தவேள்வாசற் படிதுலங்க
பஞ்சலிங்கத்திலு மிஞ்சுலிங்கமதான
பரியகொடிமரம்வந் துகியகதைதனை
இலக்கணக்கவிவாணர் மூழக்குஞ்சபைநடுவே
யேழையென்கவியாக யிவ்வேளைபாடுவேன்
அலக்கநிலாவெரிகரும் கலைபூர்ணச்சந்திரன்முன்
தோற்றும்வெள்ளியொன்றுதித்தங் கேத்தியதோர் [கும்
ககனத்திலேபறக்குங்கெவன சித்தாதிகள்முன்
காவிலாமுடவனோடி லாவிடலொக்கும்
ஜெகமெய்த்தநவரத்ன மகம்விற்றகடையதிற்
சிறுசங்குமணிவிற்ற பருங்கையொக்கும்
சொற்குற்றம்பொருள்குற்றம்பற்குற்றமிசைக்குற்றம்
தொகைக்குற்றம் வகைக்குற்றமுற்றிடினும்
மற்புற்றவசுரர்கள் விற்குற்றுருயிர்கொண்ட
மயில்வேற்குமரன்புக ழொயிலானதால்
வளர்க்குங்கிளிப்பிள்ளைக்கு விளக்குஞ்சொல்லைத்திருத்தி
வருத்திக்கொடுத்துக் கேட்பதிருப்பதுபோல்
அளக்குஞ்செந்தமிழ்மாலை தழைக்கமுகமலர்ந்தே
அகத்திற்பெரியார்கொள்ள மிகக்கடனே.

### கோச்சகம்.

கன்னல்மதவேளை நெற்றிக்கண்ணாலெரித்தவனை
யுன்னி முருகன் பூசித்துகந்தங்கிருந்ததினால்
நன்னயஞ்சேர் செந்தூர்க்கு நான்மாடகூடநகர்
மன்னன்வருமாறும் வகுத்தெடுத்துச்சொல்வேனே.

### வேறு சந்தம்.

மதுரைநாயகன் பாண்டியராஜன்
மகாதவஞ்செய்து பெற்றமகட்கு
குதிரைமாமுகமானது கண்டு
குலத்துக்கீனமென்று நினைத்துமன்னன்
யென்மகள்முகம் பெண்முகமானு
லெந்தெந்தத்தேவசாகிலவர்க்கு
நன்மனதுடன் தேர்த்திருநாளும்
நடத்திவைப்பேனென்றுசொல்லி
மூடுபல்லக்கிலே பெண்ணைவைத்து
முதிபகால்வகைச் சேனையுங்கூட்டி
தேடுகோடி திரவியமுங்கொண்டு
தீர்த்தவாரியாட வெழுந்துசென்றார்
பூவுலகிலுள்ள தலங்களெல்லாம்
போயறிந்துதீர்த்தமாடிப்பணிந்து
ஆவதொன்றுமில்லை யென்றுசுற்றி
யலைந்துசெந்தூரின்தலத்தில்வந்தார்
சமுத்திரதானம் பண்ணிக்கொண்டு
சண்முகநாதனடி தொழுதுநின்றார்
அமத்தியன்றிரவிற் கனவில்வந்து
ஆதிசிவன்மகனுமேதுசொல்வார்
சன்னதித்தீர்த்தமாடிவந்தென்னிட
தாயாள்வெயிலுகந்தாள் கோவிலேயி
பின்னமில்லாநாலுபத்தொருதினம்
பெருந்தவமிருந்து வருவாயானால்
உனதுமனதின்படி யாகுமென்று
உமையவள்பாலகனுமோதிநிற்க

கனவிலுரைத்ததுவைக் கண்டுகந்தான்
  கந்தனடிமலரைப்பணிந்தெழுந்தான்
அன்றுதொடுத்தந்தப் பாண்டியனும்
  ஆச்சிவெயிலுகந்தாள் சன்னதிக்கே
சென்றுதவசிருந்தாறுலுபத்துத்
  இனமும் சரியாகமுடிந்ததுவே
நாற்பத்தொன்றாநாள் காலையிலே
  நல்லபாண்டியனுமகளுமாக
காற்பதின்றொருநாளிருக்கின்றதை
  கண்டுதெரிந்திடவே வேணுமென்று
சிந்துசமுத்திரத்தீர்த்தமாடி
  தேவிவெயிலுகந்தாள் கோவில்நாடி
வந்துசந்நிதி பணிந்துநின்று
  மகள்முகம்பெண்முகமாகணுமென்றான்
கண்டுகொண்டந்தத் தேவிவெயிலு
  கந்தஅம்மனவள் மனமகிழ்ந்து
தொண்டுசெய்தவர்க்கு வரங்கொடுத்து
  துணையிருக்கவந்த மகமாயி
கோதுகுழல்மன்னன் மகட்கிருந்த
  குதிரைமுகமதனை வாங்கிக்கொண்டு
மாதுவெயிலுகந்தாள் மதிமுகத்தை
  மதுரைப்பாண்டியன் மகளுக்கீய்ந்தான்
பார்த்துமகிழ்ந்தானே கூடல் மன்னன்
  பாலகிதன்முகத் தொனியைக்கண்டு
கார்த்திகேயனடி தொழுதுவெயில்
  கந்தவம்மனையும் போற்றிசெய்து
வந்துயிந்தத்தீர்த்தமூழ்கினதால்
  மகள்முகம்தன்முகமானதென்று
அந்தமாயித்தீர்த்த மகாவதன
  ஆரம்பதீர்த்தமெனப் பேரும்வைத்தார்
சிந்தைகொண்டுவேள்க்கும் வெயிலாட்கும
  சிறப்புகளோடுமுழுக்காப்புநடத்தி

தந்திரப்போத்திமார் தலத்தாருடன்
தானத்தார்பிள்ளைமாரூரார்தம்மோடு
நீண்டவருஷத்துக்கோருற்சவம்
நித்தன்மகனுக்கென்று முன்னுள்ளோர்வைத்தார்
ஆண்டுக்கிரண்டான திருவிழாவை
ஆவணி மாசியும் நடப்பதற்கு
செங்கைவேலவர்க் கன்பானவிப்போ
திருவிழாநடத்த வேணுமென்று
கொங்கலரணி காங்கேயன்மேவிய
கோவிலுள்தேரையும் சுற்றிப்பார்த்து
மாதுசகமப மும் பெருமாவெவளி
வர்ணத்தேருக்கச்சுத்தளமாடரும்
கோதிலநமூனற்கு மங்களமென்று
கொண்டுவாருங்களென்றுரைத்தனனே

விருத்தம்.

பஞ்சவனுரைத்த மாற்றம் பரிவுடன் யாருங்கேட்டு
மிஞ்சகாஞ்செய்தபுண்ய மீனவன் வந்த னென்று
அஞ்சமில்லாமசெந்தூர் வருபவர் தெரிவைபெல்லா
நெஞ்சமீதன்பாய் கேட்க நிகழ்த்துவேன நிகழ்த்துவேனே.

வேறு சந்தம்.

தந்திரஞ்செய்மார் பாடிப்போற்றிமாரும் மிக்க
சாஸ்திரிமார் சுதந்த்ரர்தலத்தாரும்
சுந்தரக்கோத்திரத்துள்ள நம்பிமாரு மதிற்
கட்டனனபொன்னம்பலப் பட்டருடனே
கந்தர் திருப்பணி வேலாயுதச்சிவனும் நாட்டுக்
காணிக்காரா முதற்குடியாளரும்
செந்தில்மாநகரத்தின் சபைக்கணக்கரும் திருச்
செந்திலையுடையானு மவன்பின்னவரும்
சொந்தமாகவேயெழுத் தீவந்திகண்ணனும் கொடும்
சூரனைவென்றுனே டதிகாரகர்த்தரும்
வந்தயோகனுமமுடக் கொத்தனுடனே நல்ல
வல்லவராயக்கோத்தனோ டெல்லாக்கோத்தரும்

ஆய்ந்த சிற்பசாஸ்திரத்தில் பிரபல்யவான் இந்த
அவனிபுகழுஞ்சரு வரங் காசாரியாரும்
வாய்ந்தமாத்தச்சரையும் பயணம்பண்ணியே கூட்
மன்னவராப்பாக் குகன் சன்னதிக்கேகி
அரிமலர்ப்பதந்தொழுதிலே பூதியையும் நம்ம
ளந்தன்மான் சந்தனமுமெத்தவாங்கியே
கரியமாணிக்கப்பிள்ளை பார்க்கர்ச்சனைசெய்து சந்தி
கண்டசன்னதிகளெல்லாம்விண்டனுப்பியே
சண்முகன்முத்திரையும் வேலாயுதங்களும் வெள்ளைச்
சாமரங்களுடன்வட்ட விசிறிகளும்
விண்முகத்துலாவிய மயிற்கொடிகளும் வந்த
வெண்கதிர்போல களிக்குந் தண்குடைகளும்
பொற்குமிழ்களுட்டிகளு மிக்கவெடுத்து கொண்டு
பூட்டுவண்டிகளும் மற்ற யேத்தினங்களும்
கற்றவடுபோலவெ நமைக் கடாக்களும் வெகு
காமட்டங்களுந்தபா சாகத்திட்டஞ்செய்து
நாளைக்குன்தபமிதான் லக்கினத்திலே நல்ல
நாட்டாண்மைக்கு அவருவார்க் கெல்லாஞ்சொல்லி
வேலையையு மதியையு மாகிழிபினற் கட்டி
வென்றமின்னர் பலகளிற் சென்றனர்களே

கலிப்பா.

பாட்டியல் பத்தின் படிபறித்த மட்டெடுத்துக்
காட்டியுரைத்தேனினிமேற் காசினியெல்லாமலர
அட்டிவைக்குவெட்டுநிகா சாது முகக்கொத்தனிட
வீட்டில்கடந்தசெய்தி யின்னுமேவன் கேட்பீரே.

வேறு சந்தம்.

அஞ்சாத்தயிரிபலான் ஆறுமுகக்கொத்தனவன்
மஞ்சார்குழல்மனையாள் வாழ்ந்திருக்கும் வீட்டில்வந்தான்
சட்டாசவர்க்களுடன் தையலமுதிடவருந்தி
விட்டசலசத்திபண்ணி வெத்திலையும்போட்டுக்கொண்டு

பஞ்சணையின்மேலிருந்து பைந்தொடியாள்தன்னுடனே
அஞ்சலிடுராசமன்ன னழைத்ததுவுஞ் சொன்னதுவும்
நுத்தியமாய்ச்சொல்லியபின் சூதவனைகலிலைசெய்து
நித்திரையாய்க்கண்பொருந்தி நீங்காதறங்குகையில்
பக்கத்தில்படுத்திருந்த பாவையொருகனவுகண்டாள்
அக்கணமேவிழித்தெழுந்து ஆளனிடஞ்சொல்லலுற்றாள்
கோமாரனனையது கொடும்போக்காய் போய்விடவும்
ஆமாரொன்றறியாம லைந்தருவைச்சாய்த்திடவும்
சாய்த்ததருக்களைத்தான் தானேகொணர்ந்திடவும்
வாய்த்திருந்தபூந்தருவை மாருதிகளழித்திடவும்
சிங்கமதுவாழ்குகையில் சிறியநரிக்கூட்டம்வந்து
சங்கையில்லாமிருகங்களைத் தான்பிடிங்கித்தின்றிடவும்
வதுவைசெய்தநாட்டரித்த மங்கிலியம்பருகிடவும்
புதுவயிரத்தந்தமெல்லாம் பொதுபொலெனவுதிர்ந்திடவும்
காரிடிபோல்மடமடென்று கற்கினறுயிடிந்திடவும்
வேரிமலர்க்கைச்சிப்பாற் வெறுந்தலையைக்கோதிடவும்
கூறந்துவளும்பாற்குடந்தான் கைதவறிவிழ்ந்திடவும்
குறைந்திடைமாதரசி கொடியகனுக்கண்டேனென்றாள்
கண்டகனுவானதுவும் காதலனைபொல்லாது
ரண்டுகையாற்பொன்வரிலும் நடைபகலப்போகாதென்றாள்
ஆயிழையாள்வார்த்தைகேட்டு ஆறுமுகக்கொத்தன்சொல்வான்
சேயிழையாள்சொற்பனத்தாற் சிரவியங்கண்டெடுப்பார்களோ
போடிநீபுலம்பாதே புத்திகெட்டபெண்கொடியே
கூடித்துணைசெய்குவார் கோலமயில்வாகனவேள்
ஒன்றுக்குமஞ்சாதேநீ யென்றுரைத்துவிடிந்ததின்பின்
இன்றுநான்போய்வருவேனென் றெழுந்தனுப்பிவந்தனனே.

விருத்தம்.

அறப்புகழ்கொண்டோனந்த வறுமுகக்கொத்தன்வீட்டிற்
சிறப்புடனடந்தசெய்தி செப்பினேனினிமேற் வெற்பிற்
குறப்பெண்ணின் பாகர்க்கன்பாங் கொடிமரந்தனக்காயரும்
பிறப்படுஞ்சிங்காரத்தின் பெருமையைப் புகலுவேனே.

## வேறு சந்தம்.

சீர்வளர்தந்திரப்போற்றிமார் முதலெல்லோருந்
    தெப்பக்குளத்தரசடியில் ஒப்பத்துடன்வந்து
கார்முகில்போல்யானைபரி தேருளதாய்வண்டி
    கவிகைதுசம்விசிறிபல சிவிகைவெஞ்சாமரைகள்
பேரிகைதடாரிதவில் பூரிகைடம்மானம்
    பின்னமில்லாத்துடிநாக சின்னமோடேக்காளம்
தாரைமுரிகனகடப்பு காரைவெல்லுநகரா
    தத்தியென்ற கைமணியுந் தித்தியுஞ்சிங்குழலும்
மத்தளதாளமுளங்கவிதவசனர்பாட
    மாவடிதப்பாதமுறைத் தேவடியாராட
அத்தருணம்வண்டிகளிலுத்தகிடாப்பூட்டி
    அரசாள்வசாடிவணங்கித் தருவைப்புல்மீதிறக்கி
தேவிமுத்தாரம்மனிரு பூவினடிதொழுது
    தெள்ளியசீர்குன்றுடையா பிள்ளைமடத்திற்போய்
கூவிவெகுமான்கலைகள் தாவிவிளையாடுங்
    குட்டிகுளந்தருவையையும் விட்டியல்பாய்கடந்து
மெல்லப்படிமீதுநின்று மேற்குமுகமாக
    மெய்யன்புடன் குன்றுமலையையனையும்பணிந்து
குல்லப்புயனுணமுகி லெல்லப்பநாயக்கன்
    குளத்தாங்கரையின்வழியே தளத்துடனேநடந்தார்
சாலைவழிவண்டி யுடன் வேலைசெல்லுமாப்போல்
    தடதடென தீத்தியப்பன் மடமதில்மேவினர்
சேலைவிழியாவுடைய வாலைமின்னார்மேவும்
    இருக்கக்குறிச்சிமடமும் பெருக்கத்துடன்கடந்தார்
கன்னிகுறிச்சிப்பதியிற்சொங்கியிஷத்திற்போய்
    கலியுகவரதனிரு பதவிணைந்துதொழுது
பொன்னிதிசேர்மருதூர்களை தன்னையுவிட்டேகி
    போற்றியசீர்பெருகுஞ்சிவலாத்தைபுறத்திற்போய்
வேளத்தின் மெய்யுரித்துப்போர்த்த காளத்தீஸ்வரரை
    வேண்டியங்கமுதகுநகர்த்தூண்டிக்கணக்கன்மடம்போய்

வாழுவள்ளத்தோட்டநகர்ப் பாண்டவழிகூடி
வரும்பாதியோடிவரும் கரும்பனையாறிரங்கி
இளபுலியார்சேரிசாத்தன் குளமதிற்போய்வாய்க்கு
மிட்டமொழி நாரிதோட்டம் விட்டுமகிழ்வாக
குளத்துறையவாழ்செந்திலம் பலமும்விட்டுகம்பி
குறிச்சியுநட்டாற்கடந்து கோட்டைக்கருங்குளத்தில்
வருமிவர்கள்செய்திதன்னை விஜயநகர்வாழும்
பாத்தாண்டம்பிள்ளை பெதிர் கேட்டுடனேவந்து
குருபரவேள்சன்னதியிற் தெரிசனைசெய்வதுபோற்
கொண்டஞ்ஞானி ந் யைபாய் தெண்டனிட்டுப்பலிந்து
யேழையடியேன்கண்டுமிவ் வேளைசெல்லுவானே
இன்றைக்கிருந்தசனம்பண்ணிக் கொண்டுதளத்துட
னாளையுதயஞ்செல்லலா நீமலழியென்று |னே
நமஸ்கரித்துச்சொல்லிநிற்க மனங்களிந்தங்கிருந்தார்

கலிப்பா.

இருந்துபிரசாதமது யிலைபூஜியுக்சொடுக்க
விருந்தென்றரிசிகறி வேணதெல்லாமீய்ந்திடவே
திருந்தும்படிசமைத்துத் தினருந்திர்துஞ்சிரவி
வருந்தருணமுன்பதற்குள் வண்டியினேர்பூட்டினரே.

வேறு சந்தம்.

கோட்டைக்கருங்குளம விட்டு நாட்டத்தடனெந்த
கும்பிகுளமுஞ் சமுகாரங்கபுரமும்
யிட்டத்துடனே கடந்துமேற்குப் பாதையாய்க் கூடி
யெட்டிநடந்தார்தற்மத் துப் பட்டிவழியே
பேயப்புலான்குளங்கடந்து தோப்பினஞ்செறிந்துவிடும்
பெருங்குடிகழித்தவ் வாறு மியங்கிநடந்து
வாய்ப்புடன்மலைப்பொத்தையும் பார்த்தநின்று பின்பு
வழுத்தவிற்காவற்கிணற்றின் மடத்திலிருந்து
பணமொழியவ்வையாரிடைப் பெண்வதுவைசெய் சோழன்
பாண்டியன்சேரன்மூவரைக்துன்…

விண்வெளியிலோ மூகாமலே தண்ணீழலுற யாரு
மெய்யுமச்செய்யும்ப் பந்தற்கப்புறமானாற்
தடையிலாதுகோட்டைவாச லிடைவழிசென்று ஆங்கு
தடதடென ஆராமொழிக்கடைவழியேபோய்
குடையிலாதுமலேகவிழ்த்த முடைவெண்ணையுண்ட கிருஷ்
கோவில்சேவித்தே தோவாழை மேவியிருந்து [ணர்
உள்ளமகிழ்வாய்மநகரன் வெள்ளைமடமும் கடந்
தொழுகநெறியா நிரங்கி வழியிலேறியே
மெள்ளவடசேரிவிட்டுத் தள்ளிக்கடந்து கண்
விழிக்குமுன்னேயார்பதி புரந்தனைக்கண்டார்
விளம்பியாரமக்கியானன் குளங்கடந்துபோ யப்பால்
வில்லுக்கிரிகடுவாசச் செல்லும்போதிலே
வளம்பலவுங்கண்டுநின்று வடக்குமுகமாய் வேள்வி
மங்கைக்குகனைப்பணிந்து செட்டமலைச்சரிவூடே
பாதையாம்புலியக்குரிச்சி மீதுபோயப்பால் மெள்ள
பற்பநாபபுரத்திலே யொப்புடன்சென்று
மாதயவும்வஞ்சிபால ராமமார்த்தாண்ட னல்ல
வர்மகுலசேகரனுந் தர்மனைக்கண்டு ,
கார்த்திகேயநிலேபூதி தீர்த்தப்பிரசாத மிரு
கையாற்கொடுத்துடன்வந்த செய்தியுஞ்சொன்னார்
பார்த்திபர்சொன்னதுவுள்ள யதார்த்தமென்றொரு ரத்னப்
பதைக்கமும்பட்டுமாயிரம் பணமுங்கொடுத்து
யின்பமுடனிவர்களுக் கன்பதேகாலாம் திதி
யெப்பொழுதுநடக்கவே கற்பனைசெய்து
ஒன்பதுமலைப்பழிஞர் முன்னுள்ளபேரில் கூட்டி
உத்தரவுடனிட்டுங் கொடுத்தனுப்பினார்
அனுப்பினவுடன்கொட்டாரபுரத்திலேசென்று அன்றைக்
கங்குதங்கிப்பின்பு திவட் டாற்றினில்வந்தார்
நினுமிரவைந்திபெருகு மருமைநல்லூரும் விட்டு

(சந்த தாளிசை விருத்தம்.)

அரியவீரவநல்லூரின் மேவினவ
ரன்றிருந்தமுது வுண்டுசொண்
டிரவிலேவிழி துயின்றயாவரு
மெழுந்திருந்துடன் விடிந்திட
பரியபொன்மலையில் விரைவதாகவரு
பாதைகூடவருள் தாதையாங்
குருபரன்பெயரை மனநினைந்துநதி
கூறியேமலையி லேறினர்

வேறு சந்தம்.

சரிவினொருவுருபரிய பெருவரையிலேறி
தருணமதில்வருபரனை யருள்பெருகநாடி
குருபரனையடியவர்கள் மனதில்நிறைவோனை
குரவைதிரையொலி பெருகுகரையிலுறைவோனை
அசுரர்குவடோடுமடிய வயிலைவிடுத்தோனை
யரனறியவொருகுடிலை யுரைசெய்குரவோனை
பசுநிரைபின்வருமரித னருமைமருகோனை
பரைகௌரிகுமரிதிரி புரையுதவுவோனை
கடலிலொருகொடிமரமு வரவருள்செய்தோனை
கனவுலகிலிமையவர்கள் தொழுபதமுளோனை
குடமுனிவரறியநல்ல தமிழுரைசெய்தோனை
குழலியெனமழலைமொழி கனிவிற்பழையோனை
செத்தஆனையதற்குயிர் கொடுத்தமுருகோனை
செப்பவுண்மைக்குரையளித்த வொப்பும்புகழோனை
பத்தர்பாடிடதமிழ் விரித்தபெரியோனை
பரமபாதத்தவனைநினைந் தொருமையாகவே
வேட்டைக்குவந்தவர் பண்ணிக் கோட்டைப்புதூரில்
வெற்பாசர்வாழ்பதியிலப் பொழுதேசென்று
காட்டத்துடன்கையிலுள்ள நீட்டளித்தார்பார்த்து
நன்புரைத்தந்தனுப்பிடப் பின்னென்பதுபேருடனே

காழிமலைமேழவுயர் வெள்ளிமலைபார்த்து
சாந்தியொளிமீறிய பமேரந்தமலைபார்த்து
ஆழியினினங்கள்சேரி கூழிமலைபார்த்து
அருமலையுடன்பெரிய கருமலைகள்பார்த்து
வெள்ளிமலைபோலநிரை வள்ளிமலைபார்த்து
வேடர்மலையுமாதி சேடன்மலைபார்த்து
புள்ளினங்கள்கூட்டமது துள்ளிவிளையாடும்
புல்லுமலையானதொரு கொல்லிமலைபார்த்து
சந்தனமரத்தாலச்சுச் சாயுமலைபார்த்து
தாடகைமலையும்பார்த்துச் சதுரகிரிபார்த்து
மந்தியுடனேபெரிய சந்திகூடியாடும்
மாவில்மலைநீலமலை யேலமலைபார்த்து
காரியங்கள்வந்துசிக்கு மாரியங்காவதுவும்
கழுகுமலைபார்த்துநறை யொழுகுமலைபார்த்து
சீரிவுமைநாகமலை மீறிவளஞ்சேரு
சிக்கந்தர்மலையங்குள்ள பக்கமெல்லாம்பார்த்து
கோங்குவனந்தேங்குவன மூங்கிலிடவனங்கள்
குளத்துப்புளிதிறைந்துநின்று செளித்துவிடும்வன[ங்கள்
நாங்குவனந்தேன்கூடுள் தூங்கிடும்வனங்கள்
நாடியுங்காணுமைமலை வடிநின்றுபோய்
யென்னசெய்வோம்செந்தில்வளர் சண்முகனேயென்று
யேற்றிநடந்தார்பழைய மேற்றிசையைநாடி
முன்னமொருமலையதனை மண்ணதனிலடக்கி
முதல்வனுமையோடுசெலும் வந்தனையதுகண்டு
நதிசோடியோடிவரும் பொதிகைமுனிமேவும்
நன்மலையின்காவிலொரு கும்பலற்றுள்ளே
துதிசெய்கொடிமரமுமொரு பெரியசீதருக்கரசும்
தோற்றினதுக்கண்டுவிழி பார்த்துளமகிழ்ந்தார்

விருத்தம்.

கந்தவேள் கிருபையாலே கடல்முனிபொதிகைக்காவில்
சந்தன மரத்தைக்கண்டு சகலருஞ் சுற்றிப்பார்த்து
சிந்தையில் மகிழ்ச்சையாகி சிங்கலக்கினமிப்போதே
பிந்தமீழ் மாந்தரிக்க பெத்[illegible]ன்றார்.]

## வேறு சந்தம்.

சந்தனமரத்தின் கன்னிமூலையில்
சாணிபிரண்டு தரையை மெழுகியே
விந்தையானந்தக் கோமியத்தண்டத்தில்
விக்கினேஸ்வரனை யாவாகனம்பண்ணி
அறுகம்புல்லு நறுமலர்மாலையும்
அற்சித்துக்குங்குமக் களபங்களும்
மறுவில்லாமலணிந்து செந்நெல்விரை
வாரியேநிறைநாழியுமுன்வைத்து
ஒளிவிளக்குந்திருவிளக்குமேற்றி
வோங்கல்வாழைகனிதேங்கனிவர்க்கமும்
களிவிளைக்குங்கருப்பிளநீரவல்
கடலைதுவரைவிடலைபொரிவடை
தோசையப்பமதிரசமோதகம்
சுவியமிட்டலி வெள்ளுண்டை தேன்குழல்
ஆசையுற்ற நெய்பாயாசஞ் சற்கரை
அன்னமுன்னமதெல்லாம் படைத்தபின்
வெள்ளிலையடைக்காய்கொன்றைப்புட்பமும்
வேண்டிவைத்துச் சருவங்காசாரிதான்
வள்ளிபங்கனையுன்னித் தேங்காயதை
வாங்கியாரையுங்கைகடாந்தொடச்சொல்லி
ஒப்பரானமாய்த்தேங்காயுடைக்கயில்
ஒருதும்மல்பொழுக்கென்றெழுந்திட
தேம்படுகாய் கண்ணோடு சிதறியே
சில்லிசில்லியாகத்தெறித்தோடிட
ஐயப்பட்டு மறுகாயெடுத்துடைத்
தன்புடன் தீபதூபங் கொடுத்தப்பின்
வையகத்திற்புகழுங் கொத்தமார்க்கு
மற்றத்தச்சர் தொழிலாளிகட்கெல்லாம்
பாக்குவெத்திலைதேங்காய் பழத்துடன்
பார்த்துப்பார்த்துக்கொடுத்திடவாங்கிக்கொண்

ஆக்கமாகக்கோ டாரி யெடுக்கையில்
    வடுக்கநின்றெத்தை யாங்கையோர்கீச்சிட
வளமாய்ப்பூமியின் வேர் காணச்சுத்தெல்லாம்
    மண்வெட்டிகொண்டு தோண்டிப்பிடுங்கிட
தளவாய்வீரவா குன் டென்றுகொத்தமார்
    தாங்கிக்கோடாரி யோங்கிடும்வேளையில்
குறைக்கெவுளி சொன்னதும் பாராமல்
    கோடாரிகொண்டு தாருவிற்போட்டனர்
தறிக்கப்போட்ட கோ டாரிசரிகியே
    தன்முளங்காலிற் பட்டுடன்வீழ்ந்தனர்
வீழ்ந்ததுங்காலில் ரெத்தத் தையுங்கண்டு
    மெய்மயங்கியே யாறுமுகக்கொத்தன்
தாழ்ந்ததுகண்டு பொன்னம்பலப்பட்டர்
    தந்த்ரமந்த்ரஞ்செய் தே நீறுபூசினர்
பூசிடவெட்டுக்காயமும் ரெத்தமும்
    புன்மைபாய்வேறே விக்கினமில்லாமல்
மாசிலாமணிக்கொத்த னெழுந்துமேவர்
    மந்த்ரமானசடாக்ஷா முன்னிக்கொண்
டாடுகோழிகரும் பன்றிமுப்பெலி
    யானதுங்கொடுத் துக் கொத்தமாரெல்லாம்
மாடுசூழநின்றோர்க ளப்போதிலே
    வட்டமாய்நின்று வெட்டியேசாய்த்தனர்
சாய்த்தபின்புதேர்க் கச்சுத்தடிகளும்
    தளபாடத்துடன்வெட்டின கொப்பெல்லாம்
வாய்த்திடத்தரித் தொன் றாகப்பாரித்து
    மரத்தைதச்சர் வகுக்கச்செருக்கியே
தெற்பமாகப்பிரப்ப பங்கொடியினும்
    சேர்த்துக்கட்டியவ் வாற்றினிலேவிட்டு
வெற்பின்மேல்வரு மாற்றுத் தண்ணீர்வழி
    மேல்மிதக்கக் கொடு வரும்போதிலே

3

## கலிப்பா.

ஓடமெனவாற்றில்விட்டெல் லோரும்மகிழ்வாய்க்கிழக்கே
நாடமனதொன்றாய் நடக்குமந்த வேளையதில்
யேடவிழும்பூஞ்சம்பர்க் கேற்றகொடிமரத்தின்
கூடவந்ததெய்வக் குழாத் தின்வகைசொல்வோமே

## வேறு சந்தம்.

அகத்தியர்மேவும் பொதிகையிலே வயி
ராக்கியன்காவையன் சன்னதியில்
மகத்துவமான தேவாதிதேவன் வண்டி
மலையவன் சங்கிலிப்பூதனுடன்
மோதுந்தடிக்காரன் முன்னடியன் னல்ல
முச்சந்திமாடனுடன் புதியவனும்
சூதன்றடிக்காரன் மொட்டையனுஞ் சொன்ன
சொற்கேளா வீற னெளிமறவன்
ஆரியப்பட்டனுடன் கச்சைக்காரன் பின்
னரசன்மகன் தவசித் தம்பிரானும்
மீசிக்கடலினுயிர் மீன்பிடிக்க வந்து
மேவியதுண்டிக்காரன் வல்லவராயன்
இருளோரடிவரும் புலமாடனுந் தடி
யேந்தியகை நல்மாடனுடன்
பொருளதைநாடியே கொண்டிருக்கும் லிங்கப்
பூதன்சிவனணைஞ்ச பெருமாளுடன்
பார்க்கும்பல வேசக் காரனுடன் வெட்டுப்
பட்டவன்பட்டாணி ராவுத்தனும்
ஆர்க்கும்பகையினக் கோ ரணிக்கணங்கள் குதித்
தாடிவருஞ் சுடலைமாடனுடன்
ஆலிக்கழுக்காரன் வன்னியனுங் கறுப்
பண்ணன்பகடையுடன் குருக்குழுஞ்சி
கூலிகையில்வாங்கித் திரியவரும் பொருள்
கொத்தளவீரன்பில்லிக்குழுண்டன்

காக்குங்கசமாடன் வேடராயனும் பிச்சக்
காரன்பிணமாலை குடியுடன்
நீக்குளிக்கலவனும் வண்ணாரமாடன் ஒரு
செங்கிடாக்கார ஞெண்டிவீரன்
கட்டளகவ்வெள்ளைக் குதிரைக்காரன் பெருங்
காத்தவராயனொரு செல்லப்பிள்ளை
சிட்டர்பரிபாலன் கோரவீரன் பெலி
தின்றிடும்பாதாள கண்டியுடன்
தாடகத்தியொரு மாவிசக்கி ரத்த
சாமுண்டி சூலாட்டுக்காரிவெள்ளை
மாடத்திகாட்டேரி வேதகுல மக
மாயிபெரும்பிரம ரச்சதையும்
அக்கிரமகருட்டியை யைன்காச்சி பேச்சி
யம்மனுமதர்ம சண்டாளிமுதல்
உக்கிரபாபிக்குத் தெய்வமெல்லாம் காவி
லொன்றாகக்கூடி வளைந்ததுவே.

---

## விருத்தம்.

வளைந்திடுந்தெய்வக்கூட்ட வகைசொன்னேனினிமேற்சோலை
தளைந்திடுங்கூட்டக்காவில் தனித்தனிவேஷம்பூண்டு
விளைந்திடுஞ்சினமேற்கொள்ள மேவியசனத்தைமெல்லாம்
குலைந்திடமயக்கஞ்செய்த கொள்கையையுரைசெய்வேனே.

## வேறு சந்தம்.

கடல்வாய்விடம்போலே யந்தக் காவிலுள்ளதெய்வமெல்லாம்
வடவாமுகாக்கினிதான் சீறி வந்ததுபோலேவளைந்து
ஊழிகாலத்திருள்போல கூடி யொருபுரத்திற்சிறிதுவர
தூளிக்காற்றடித்துக் கொண்டு சுத்தியொருபுறத்தில்வர
காட்டாக்கினிவடிவாய்க் கண்ணிற் கண்டகண்டயிடத்தில்நிற்க
கூட்டமாய்க்கல்மழைபொழிந்துகொண்டு கூடியொருபுரத்தில்வர
மின்னுமிடியும்போலே யொளி மின்னிடித்தோர்புரத்தில்வர
உன்னுமலைமரங்களைப்போல் முன் னுயர்ந்துசிலவளைந்துநிற்க

கடுவாய்புலிகாடிபோலேநின்றுகதறியொருபுரத்தில்வர
குடுகுடென்றுபூனைகள்போலோடி கூப்பிட்டொருபுரத்தில்வர
பருந்துகழுகாந்தைக்கோழி போலே பரந்துசிறகாலடிக்க
திருந்துகிரவுஞ்சமலை செய்த செய்கையைப்போலேமயக்கி
பாதைகளுந்தெரியாமல் மலைப் பழினர்களுமுளமயங்கி
வாதையுறும்வேலையிலே மயில் வாகனிலைவிபூதிதன்னை
நெத்தியிற்றரித்தவுடன் யிருள் நீங்கிவரும்வழியறிந்து
முத்திபடியார்க்குதவும் சொரி முத்தையன்சன்னதிநோக்கி
சூழ்ந்தமலைக்குவடுகளும் யிருட் சோலைகளுந்தாண்கடந்து
தாழ்ந்தமலைப்பக்கங்களு மெள்ளத் தானிறங்கிவரும்போது
குலுங்காமற்றெப்பமதாய்க் கட்டிக் கொண்டுவந்தமரங்கள்த
அலுங்காக்கசந்தனிலே பேய்க ளமுக்கிமறைத்ததுவே [னை
மூன்றுநாள்காணமல் ஆறு முகவன்றனைநினைந்து
என்றுகோலதையிழந்து தேடி யுளரிடுங்குருடனைப்போல்
நாணுவிதமயங்கியன்று நடு ராத்ரிநித்ரை வேளைதனில்
சேனைபதித்தலைவன் துரை செயவீரவாகுவந்து
அருணனுதிக்குமுன்னே நாளை யன்று வெள்ளிக்கிழமையிலே
கருணையினால்நம்மினங்கள் கண்ணில் காணுமென்றூர்சொப்பனத்
[தில்
விண்டுசொல்லச்சயந்தனைப்போற் கண்டு விடிந்துபார்த்துநின்
[றவர்கள்
கண்டுகொடிமரத்தினையே பொற் கனகம்பெற்றாப்போல்மகிழ்
ந்தார்.

---

### கலிப்பா.

அன்றுசொரிமுத்தயனுக் கங்கேகுருளுமைபண்ணிச்
சென்றுகலிபாணிபுரந்தீர்த்த வழியாகவேதான்
குன்றுடையார்க் காடைபொன்னும் கொண்டாடியிய்ந்தனுப்ப
வென்றியுடன்தெர்ப்பமதாய் விக்ரமசிங்கத்தில்வந்தார்

### வேறு சந்தம்.

வந்தவரெல்லோரு முத்தையன் மலர்ப்பதத்தெண்டனிட்டு
தந்தனையுநினைந்து மனதிற் கருணையுடன்றொழுது

கப்பமுரசுதவில் மல்லரி கருங்கொம்புசத்தக்குழல்
பம்பைமுதலாகப் பதினெட்டுப் பல்லியங்கள் முளங்க
ஆற்றங்கரையில்வந்து வடபா லரசடிபாந்துறையில்
தேற்றமுடனிறங்கிக் கொடிமரத் தெப்பங்கரையேற்றி
யேலயேலமென்று கோத்தமா ரெல்லோருமுன்னிழுக்கக்
கிலகிலமென்று ஐபங்காச்சி கெர்ச்சித்துபின்னிழுக்க
அன்புடன்கொத்தமா ரொருமுழ மாரத்தில்வாங்கிடவே
ஒன்பதுமுழந்தான் னென்றுபின் குறையாமல்வாங்குதடா
சற்றுநகழாம லிழுத்த சனங்களெல்லாஞ்சடைத்து
குற்றமேவமென்றுமிலைப் பெலிகள் கொடுத்தால்நகருமென்று
கருத்தப்பன்றியுடன் சூலாடு கருங்கிடாய்கோழிகளை
அருத்தாத்தமிட்டார் மரங்கஷலாறுமேயோடிடவே
வடங்கொண்டேயந்த மரங்களை வண்டிதனிலேற்றி
கடங்கொள்யானைகள்போற் கிடாக்களைக் கட்டிமிகப்பூட்டி
வண்டிக்காரையெடுத்துக் கொத்தமார் மாட்டையடிக்கயிலே
துண்டுத்தடியெடுத்து நல்லமாடன் சுத்தியடிப்பானும்
கைபறுவாளெடுத்துக் கருப்பண்ணான் காலையடிப்பானும்
மையிருள்போற்றோன்றிச் சுடலையின் மாடன்தடியெடுத்து
அச்சுகெறகெறென்று முறிய வதட்டியடிப்பானும் அதைப்
பிச்சுவெவ்வேறாக யிருளன் பிடுங்கியெறிவானும்
பொங்தந்தடியெடுத்துச் சங்கிலிப் பூதன்வெங்கோபமுடன்
அந்தவண்டிபசைய வோட்டாம லமுக்கிப்பிடிப்பானும்
மத்தியானவேளையில் வண்டியின் மலையன்தடிபிடித்து
கொத்தமாரில்சிலரை வளைந்து குருக்கிலடிப்பானும்
ஒண்டிவீரன்பகடை வன்னிய னெரிவன்பலவேசம்
வண்டியுடன்கோலு முறிந்திட வாரியடிப்பானும்
சேனைதளத்துடனே கூடிச் சிவனணைஞ்சபெருமாள்
ஆனைபரியோட தாக்கி யடித்துத்திரிவானும்
நாற்றிசையும்புகழும் பட்டவ ராயன்வளைந்துகொண்டு
வாத்தியக்காரரெல்லா மோடிட மடங்கவடிப்பானும்
தக்கன்தன்யாகத்திலே யடிபட்டார் தன்மையைப்போல்மயங்கி
நக்கன்குமரனடி நினைந்திட நாதன்கிருபையினால்

ஆரபாரங்கள்செய்த தெய்வங்க ளடங்கியொடிங்கிடவே
னூரதூரங்களிலே வோடினவர் சூழ்ந்தொன்றாய்க்கூடினரே

விருத்தம்.

கூடியேமுறிந்தவச்சுங் குலைக்க வண்டியுநோக்காலு
நாடியேதிரமாய்ச்செய்து நலிவிலாதெருதும்பூட்டி
பாடியேமேழவாத்யம் பரவைபோல் முளக்கஞ்செய்ய
ஆடியே கொத்தமார்கள் அதட்டியேயடிக்கலுற்றார்.

வேறு சந்தம்.

கும்பமுனிமலைமரத்தை வண்டியிலேற்றி
கொட்டாலங்குளங்கடந்து
சம்பமென்றோர்க்கருள் செய்யய்யன் கோவிலுமம்பா
சமுத்ரா நகருவிட்டு
ஓதுசெல்வனூர்க்காட்டிற் கோட்டியீசுரர்
வுபயபதம்வணங்கி
சேதுராயர்மடங்கடந்து மாப்பிள்ளையென்ற
தேவர்மடம் வருகையிலே
கடலுடைந்திடுவதுபோல் வண்டியைச்சூழ்ந்து
காவிலுள்ள தெய்வமெல்லாம்
அடல்செய்யுமன்ன செதிர்த்து வருவதாக
அவரவர்முன் போகக்கண்டார்
கண்டகண்ட யிடங்களெல்லாம் கிடாய்பிடித்து
காவுபெலி யாய்த்தரித்து
வண்டியச்சுமரங்களிலே குருதியாறாய்
வார்ந்தோடப் பிருதிசெய்து
விருப்புடைய கருவூர்ச்சித்தன் சொலுமொழியால்
மெய்சாந்த லிங்கமிருக்கும்
திருப்புடைய மருதூர்வந்து மாலயணங்கர்
தேவனையும் போற்றிசெய்து
நேயம்பெருமேலக்கல்லூர் கீழக்கல்லூரும்
நெடியபாம்புக்கடந்து

ஆயன்பேட்டைதனிலேவந்து ச்சலர்களு
    மல்லூர்குளத்திலிறங்கி
காந்திமதிநாயகனார் தலசிறந்தும்
    கம்பாநதிக்குக் கிழக்காய்
நீந்திநீந்தியோடிவரும் வாய்க்காலிவிட்ட
    நெடும்பாலந் தனிலேறி
நெல்லைநகராலடிவி நாயகன்கோவில்
    நெறியுடன்மேற்குத்தெருவில்
வல்லவன் சன்னதிப்பிள்ளையார் கோவிலும்விட்டு
    வாகையடிமுக்கில்வந்து
வடிவம்பாள்கோவிலின்முன்னே மரக்கொட்டகை
    வாசல்கண்டு செண்டனிட்டு
சடிலர்வேணு வனயீசர் நெல்லைபம்பலர்
    சன்னதியைத் தொழுதவுடன்
பட்டமார் தலத்தாருடன் விக்தலாங்கிஷர்
    பாவைபருந் தாசிகளும்
மட்டவிளனங்கன்மார்பன் யின்றசீர்நெடு
    மாராலுடன் சித்தாகளும்
வந்துபிர சாதமீய்ந்து விருந்துபன்னை
    மருந்துபோல்விருந்தருந்தி
உந்துசெற்பக் குளங்கடந்து வலியபுளி
    யுள்ளமரச் சாலைவழி
காயிலாச நாதரிருக்குஞ் சிந்துபூந்துறை
    கங்கையிலிறங்கியேரி
அயிலாரும்வேலிரண்டெனவே விழியுடைய
    அங்கசாதி போலொருபெண்
கைக்குழந்தைதனைப்போட்டு பலாப்பழத்தை
    கண்டெடுத்த வாய்க்கால்விட்டு
மைக்கூழ்ந்த சாலைகடந்து பாளையங்கோட்டை
    வடக்குவாசலிலே வந்து
யீசான மூலைக்கோவில் புராந்தகவி
    யீசுரரைத் தோத்தரித்து

மாசாலைவழிகூடி பதன்கிழக்கே
 வாய்க்கதொருமடங்கடந்து
விசையராகவ முதலியாரின் சத்திரத்தையு
 மிருகுளத்தங் கரையும்விட்டு
இசையுள்ள தாதன்மடமுந் தாசிமடமு
 மேற்றவழிப் பாதைவந்து
கணநங்கவே ளரசுசெய்யுங் கிட்டிணபுரக்
 கற்பாரம்புஞ் செட்டிமடமும்
திளதங்கலாகக்கழித்து பணிவழியே
 செய்துங்கநல்லூரில்வந்தாரே

கலிப்பா.

வந்துசமையல்பண்ணி மாரசமாய்ப் போசனஞ்செய்
திந்தநகரி லின்றைக் கிருப்போமென்று தங்கியவர்
பந்திதனைப்பெற் றோரென்றும் பாரிருள்போய்க்கீழ்திசையில்
சுந்தரவெய்யோன்வருமுன் தோற்றும்வண்டிவிட்டனரே.

வேறு சந்தம்.

இடியிடித்ததுபோற் படிவெடித்திடவே
 யேத்தியமேள வாத்திய முழங்க
கொடிபிடித்துவரக் குடைகவிழ்த்துவரக்
 குறளைகள் முழங்க பரவைகள் துலங்க
சீர்த்திசெல்நலத்தார் போற்றிமார்தலத்தார்
 சித்தமாமகிழ்வாய்க் கொத்தமாருடனே
கீர்த்திகொண்டபுசு மார்த்த சந்தைவிட்டு
 இளந்துப்பாலம்வெளிக் குளத்தின்மேலேரி
வயற்பரம்புகளும் நயற்கருங்குளமும்
 வல்லவ ருள்ளமகிழ் நல்லபிள்ளைமடமும்
கயற்பெருங்குடிவேள் செயத்துரங்கமுள்ளான்
 கவனதொங்கப்புய நிபுண வெங்கப்பையன்
சத்திரமுங்கடந்து பத்திரமாய் நடந்து
 சதிற்குடியுயர்ந்த புதுக்குடியில்வந்து
சித்தசவேள்தமராய் சத்திரமீதில்வந்து
 ஜெலத்தைக்கைவாரி நலத்துடன்தேரி

இகலறுமாழ்வார் நகரியில்வாழ்வார்
யெதிர்கொண்டுதரவே பதில்வண்டிவரவே
ஜெகபகிழ்நீர்த்த பிருதுறைகடந்து
தேசமேதர்க்கோவில் வாசல்முன்வந்து
நேயமுகாதிநாதர் மாயனையும்வணங்கி
சோடியாலுங்கிலைத் தோடிபைக்கடந்து
தாயக்கமனமொரு நாயக்காரனவரின்
தன்மடத்தின்வழியே முன்னேரிகண்டுவந்து
பச்சைநிழல்காக்கும் லெட்சுமாத்தோப்பின்
பாதைவழிசக்கிலிப் பூதலூடகடந்து
கச்சைபணிமடவா ரிச்சைகொள்ளுமதவேள்
கட்டுஞ்சுப்பறையச் செட்டிமடங்கடந்து
சிறுமணைவாயக்கானு மொருமதவையும்விட்டு
திரையின்சரிவான பெரையூரினில்வந்து
நறுமலர்பாதர் செரிகுளைக்காதர்
நளினத்தாள்வணங்கிக் களிபெற்றங்கிருந்தாரே

---

கலித்துறை.

சுந்தரமான வல்லூரார் விருந்தென்று சொல்லவன்று
நந்தலில்லா திருந்தண்டு கொண்டேமரு காளுநையம்
சந்தருக்கன்புபெறவே வருந்தசக் கம்பமது
சென்திருப்பதி யிட்டப்பால் வரும்வழி செப்புவனே.

வேறு சந்தம்.

நதிமதிபொதி சடையினர் விடையினர்
நகையழல்கொடுத் திரிபுரம்மெரியச் செய்த
பதியென வுலைகயிலாசநாதர் பாதமவர்தொழுது
எதிரிட்ட மன்னர் சதிரிட்ட படைகளை
யிகலிட்டுடன்வா திட்டழிய மார்பு
சதிரிட்ட துரையழ கப்பமுதலியார் சத்திரமுங்கடந்து

ஏர்க்கால்வயலதி லீர்ப்பாயவேவரும்
வாய்க்கால்வழியாய்ப் பேய்குடாவே அந்த
மார்க்கானவேனிலம் பார்த்ததேபணத்தி மடத்தினில்வந்து
கருமலைக்கொழுந் தீபபலதேவதை
கோடிமரத்துடனேதுடர்ந்தே வர
திருமலைக்கொழுந்தெனவருசெவ்வாரத செய்தருமவழியாய்
பரனையத்தந்தனி லணிபவரும்பரை
கோனைத்தாம் பரவியசுந்தா னந்த
ஆனையப்பன்பரிவுடன் செய்யுந்தர்ம அன்னச்சத்திரங்கடந்து
அல்லூர்தருஞ் செல்லூர் யெழில்வள
ரில்லூர்மிகு நல்லூர்வழியாய் அங்கு
மல்லூர்புயன் கணபதிநாடான் மடத்தின்முன்வந்து
வடமலைச்சமுத்திரத்தில் வந்திரங்கி
மகாசனங்கள்செய்யும் போசனம் பண்ணி
கடல்முனிநதி போலவரும்வாய்க் காலையுங்கடந்து
இம்மானிலம்புகழ் செந்தியம்பலத்
திசைவேலன் பாலமீதேறி யந்த
அம்மாள்பேட்டையும் வள்ளிபின்வாய்க்கா லானதுங்கடந்து
சுகம்வாழ்த்துந் தலையணையாமடமூந்
தரைபுகழ் குளத்தாங்கரையும்விட்டு வேகி
குகன்வேட்டைவழி மடமதில்வண்டி குறலுறவேவரவே

---

விருத்தம்.

நீண்டமால் மருகர்க்கன்பாய் நெடியதேர் துவசகம்பம்
காண்டகவருமாமாற்றங் கருதியவ்வொலியைக்கேட்டு
சேண்டிகள்சுரர்கொண்டாடச் செந்திமானகரோர்சூழப்
பாண்டியனெதிர்கொண்டேகும் பரிசினையுரைசெய்வேனே.

வேறு சந்தம்.

செந்திநகரி லுறைந்திடுமந்தணர் யாரு மிக்க
சீர்த்திகொண்டேற்றிய போற்றிமாரங்குள்ளபெரும்

வந்தனைசேர்சில நம்பிமாரும் பிள்ளைமாரும் — கூடல்
மன்னவனுஞ்சொக்கி நன்னயனாரெல்லோரும்
பஞ்சகருவியும் மிஞ்சியசுருதியுமுழக்க — தேவப்
பாவையாடலும் பாடலுங்கண்டுள்ள மயங்க
குஞ்சக்குடைகள் கொடிகளணியாக நெருங்க — வெகு
கூட்டமுடனிவர் வேட்டைவழியில்வந் திறங்க
உப்பர்பணிதுசக் தம்பமாத்தினைக்கண்டு — மன
துள்ளத்திலேகளி கொள்ளமகிழ்ச்சைகள் கொண்டு
தம்பமென்றோர்பதம் நம்பினபேர்க்கருளீசனார் — வேலர்
சாத்தியமாலையும் போத்திலேபூதியும் பூசினார்
வேட்டைவழிவிட்டு நாட்டமுடனேகடந்து — செச
மெச்சியகர்த்தாக்கள் செச்சையின்முன்பாகவந்து
மாட்டையடித்திடுஞ் சாட்டையொலிகளைப்முடுக்க — நல்ல
மாவைக்குமரகுசுவாமிமடமதும் விடுக்க
நட்டமின்னார்புணர் கட்டழகன் சின்னத்தம்பி — செய்த
நாற்காற்சவுக்கையின் மேற்குமுகமாகத்திருப்பி
கொட்டகைவாசலிலிட்டமுடன்வந்துநின்றார் — மாக்
குத்தியுந்தேரச்சுபாமு மிரக்கியே சென்றார்
நின்றநிலைத்தேரடியுஞ் சடக்கன்மடமதும்விட்டு — வெகு
நிற்பரமாய் முருகப்பன் மடத்தையுந்தொட்டு
நன்றிபெருஞ்சிவயோகியார் மடமும்விட்டிணங்கி — குல
நன்னயசந்தனமின்ன வள்பாதத்தைவணங்கி
பேழவயிற்றொருவேழமுகத்தனைத்துதித்து — கொண்டு
பிள்ளையான்மண்டபத்துள்ள வழியதைப்பிடித்து
ஆனைவிலக்கியேவாளன் சோமவாரமடத்தில் — வந்து
அண்டர்கள் புகழ்கவண்ட மடம்விட்டுநடத்தி
குன்றெனும்விந்தம்நிமிர்ந்தது போல்வளர்காசலம்என்ற
கோபுரவாசல் கடந்துவந்தார் சந்தனுசலம்
அன்றுவழுதிமகள்மா முகத்தைத்திருத்தினார் — வது
ஊரம்பஞ்சேர்மதிலோரமாய் வண்டிநிறுத்தினரே.

---

கட்டளைக் கலிப்பா சந்தம்.

நிறுத்திவண்டியின் மேற்கொண்ட கம்பத்தைத்
நின்றுகொத்தர் தடிகொண்டுவீசியே
இறக்கிவந்தவ ரியாவரு மவரவ
ரில்லில்செல்ல மகிழ்வாக மாரனுங்
குறத்திகேள்வன் முருகேசன் சன்னிதிக்
கொடிக்கம்பம்பிர திட்டை செய்யும்வகை
திறத்துடனினி யெல்லோருங் கேட்கவே
செப்புவேன் செப்புவேனிப் புவிதன்னிலே

வேறு சந்தம்.

மீனவன்சண்முக விலாசத்திலே
வேதவேதியர் யாவருஞ்சூழவே
வானத்தின்மின் னடுவாயுதித்திடும்
மாமதிபோலிருந் தொன்றுசொல்லுவான்
குஞ்சரிவள்ளி நாயகன் சன்னதிக்
கொடிக்கம்பம் பிரதிஷ்டை செய்யவே
பஞ்சாங்கப்பட்ட ராண்டியப்பையனைப்
பார்த்துநல்லமுகூர்த்த மிடச்சொல்ல
சுப்ரமண்யர் பெயர்க்குப் பொருந்துநாள்
சுக்ரவாரமும் பூருவபட்சமும்
பொற்புவாய்ந்திலகும் புனர்பூசமும
போற்றியறிய வாலகரணமும்
ஏாசதவேளை யமிர்தயோகமும்
நலமாகிய லக்கனஞ் சிங்கமும்
மாசிலாக்கருங்காகத்துக்கூருமாய்
வாய்த்தவாணிபதி ஞாயிறுமென்றிட்
சேட்டுமன்னன் படித்தரம் வாங்கியே
கேடில்லாத்ரவியங்கள் வருத்தியே
நாட்டுஞ்சந்தனக் கம்பத்தைச் தச்சர்கள்
வாச்சிகொண்டுசெதுக்கித் திரட்டியே
சொல்லுமாகம சாத்ரவிமானத்தில்
துபிமட்டுமுயிர்ப்பிரமாணமாய்

துல்லியமாயமர்ந்து தரித்துடன்
        சொற்ணபூணுமதற்கிட்டுகட்டியே
யிட்டுலைகபலகையொரு மூன்றுஞ்சேர்த்
        தேற்றிடும்ப்ரமதண்டமணியுடன்
கட்டிச்சேர்த்து வட்டங்கள் கொழுகியே
        கப்பிக்காலையோர் நாலு திசையிலும்
பெருக்கமாட்டி வடம்போட் டிழுத்திட
        பேசுஞ்சாரத்தின்பாதியில் நிற்கவே
குருக்கள்சைவராயப் பட்டராகம
        குமாரதந்திர திவ்ய முகூர்த்தத்தில்
மயில்த்தேவர் பிரதிட்டை செய்தவர்
        வாய்த்தகும்பா வபிடேக முஞ்செய்து
மெயிற்சந்தன மாலைபரிவட்டமும்
        வேய்ந்துநெய் வேத்யதூபதீபமிட்டு
ஆதார பீடத்திற்கற் குழிதனி
        லன்றொன்பதுநவரத் தினம்வைத்து
வேதவேதியசோம சாந்திசெய்ய
        வித்வசனர்கள் பாடிநின்றாடிட
ஆழிபோலவே மேழ முழங்கிட
        வபிடேகத் தயிலநல் லெண்ணைநெய்
எழிசைபொன்னறிய தேன்பால்தயி
        ரிளநீர்கன்னல்ரச முப்பழமும்
பஞ்சகெளயதிருமஞ் சனமுடன்
        பரிவாணசலசரும் பங்களிட்டு
மிஞ்சவேயபிடேகங் களுஞ்செய்து
        வேணவேண தானங்களுமீய்ந்தபின்
பிரதானமான கும்பாபிடேகமும்
        பேணிச்செய்து பரிவட்டம்சந்தனம்
நாவுசேர்புட்பமாலைகள் சாத்தியே
        ரசவாக்கமானவன்னநெய்வேதித்து
சோடசதீபமாரா தனைபண்ணி
        சுருதியாதிதிருப்புகழோதியே

டேடவிள் மயிலாக்கும் வெயிலாக்கும்
பின்னுளார்க்கெலாமபிடேகமுஞ்செய்து
சந்தனமிலேபூதி பிரசாதந்
தானத்தார் முதல் யாவரும்வாங்கியே
வந்தவந்தபிராமணருக்கெல்லாம்
வளமாகவேபோசனம் பண்ணினரே.

---

கலிப்பா.

ஒருநாள்போய் காற்பதுநா ளுற்றவபி டேகமுதல்
பொருநாள் மறையவர்க்குப் போசனமுஞ் செய்தபின்பு
தருநாடர் போற்றுஞ்செந்திற் சண்முகவேலா யுதற்குத்
திருநாள்நடந்த சிறப்பையினிச் சொல்வேனே.

வேறு சந்தம்.

ஆவணிமாதவிசாக நட்சேத்திரத்திற் னையி
லயிலுமந்தவேளைப் பெற்ற வெயிலுமந்தாட்கு
பூவணிசெறிஆவச பாரோகணம்பண்ணி பத்திற்
பூட்டாதியிலவளுக் காராட்டுஞ்செய்து
கூறுமுத்திரட்டாதியில் நம்பியார்கையில் நல்ல
கூறையும்பவுத்திரமும் மாரன்கொடுத்து
யேறுசிவிகையுடனே யெட்டாஞ்சந்தியில் வந்து
யிருதிலமண்கொண்டுசென்று திருமுளைசெய்து
நிசியிரவின் மருநாள்வச ரிசைவளசந்தி யெல்லாம்
நின்றுநின்றுங்காரபெலி யன்றுகொடுத்து
அசுபதிராவிலேநட்ட கொடிமரத்திலே துசு
வாரோகணஞ்செய்தார் மனப்பூரணமதாய்
பூரணகும்பமுமகா தோரணங்களும் வைத்துப்
போற்றியவீதியிலன்று ராத்திரிதன்னில்
வாரணத்தந்தப்பல்லாக்கின் பேரிலெழுந்து மூன்பு
வைத்தசந்திபொன்பதையுஞ் சுத்தியேவந்து
பல்லியங்கொடிசுருட்டி வல்லயங்களும் யீட்டிப்
பாவாடைவிசிரிவெள்ளைச் சாமரைகளும்

சில்லியங்களுஞ்சூழவே குமாரவிடங்க ரண்டிற்
சிங்காசனமேற்பவனி கொண்டருளினார்
சேர்ந்தபின்னார்களுடன் மூன்றாந்திருநாளில் ஒரு
செங்கிடாயேறிக்கருணை தங்கிடவந்தார்
ஆர்ந்தசுரரும்பணிய நாலாநாளிலே மத
யானையிற்பவனிபண்டர் கோனவர்வந்தார்
குடவரைசேர்வை யெல்லோர்க்குந்திடமுடனன்று தந்து
குப்பமுறுகப்பல் பாவைசப்பரத்துடன்
வடவரைச்சிலையசாட வஞ்சாந்திருநாளில் மயில்
வாகனத்திற்கொண்டருளி யோகசித்தமாய்
அருணகிரிவேல்விருத்த மயில்விருத்தமுங் கேட்டு
அத்தருணத்திலேதிரு கைத்தலங்கொண்டு
கருணைவிழிமாதர் செய்தவூடல்தவிர்த்து சையிற்
காட்டும்பட்டயங்கொடுத்தார் சாட்டையடியால்
எண்ணுமாறாந்திருநாளில் நன்னுவகைபோற் செய்த
யிந்திரவிமான [illegible] தழுந்தருளினார்
புண்ணியவிபூதிதன்னை மண்ணிவிகழ்ந்து மதம்
போற்றுஞ்சமணரைக் கழுவேற்றிமகிழ்ந்தார்
எத்தமநாள்விண்ணோரைக் காத்தநயினார் நல்ல
யிப்புவிபணியச்சொர்ணச் சப்பரத்திலே
சாத்தும்ரத்னவங்கியுடன் றேற்றிவீதியிற் கொடி
சாமரைவிசிறிகுடை கோடிவரவே
செப்பியமுப்பத்திரண்டு மேளவாத்திய மொன்றாய்
சேவிக்கப்பகல்வெத்தி சேர்த்திவட்டியிலே
ஒப்பில்லாவனேகர் தேர் விளக்கினுடனே கம்ப
மொருகோடிவாண மதிற்வெடியிடவே [ந்தில்
முதற்சேர்வையும் வெள்ளையிரண்டாஞ்சேர்வையுந் தொழு
மூன்றாஞ்சேர்வையுங்கொடுத்து வாண்டருளினார்
சத்கோடிமனுச்சூழ வேட்டையுமாடிக் குதிரை
தன்னிலேறிவீதிவந்தார் நன்னயமெட்டில்

ஒன்பதா நாட்கயிலாச பருபதத்திலே யேறி
உச்சிதமாய்க்கொண் டுவந்தா ரச்சுபரத்தை
அன்புடனிணக்கிவட்ட வண்டிகொழுக்கி நன்று
யலங்கரித்ததேர் முன்வடி விலங்கவே நின்று
கருணையாய்க்கடாக்ஷித்தற்கு திருநாளுங்கொண்டு பத்தில்
கதிர்வருமுன்ரதமேறி வலமாகவந்து
தருணமதினன்றிரவிற் சிவிகையிலேறி நல்ல
சத்தாபரணமுங்கூடித் தெற்பங்காணவே
மாமயிற்கொடியிறக்கி க்ஷேமமாகவே செய்த
மவுனபெலியிட்டுச்சாம கலசங்களித்து
காமமுற்றவேள் திருநா ளாகமமெல்லா மாரன்
கண்கொள்ளாச்சேர்வைசெய்தபின் அன்பினுடனே
போத்திமார்தலத்தார் தானத்தார்சாணிக்காரி யிந்தப்
பூமிபுகழ்ந்திடும்பிள்ளை மார்முதலாக
தோத்திரஞ்செய்கின்ற கொத்தமார்க்குமெவர்க்கு மற்றத்
தொழிலாளிகட்கு முள்ளக்களிப்பேறவே
தங்கக்கடையம்பதைக் கஞ்சானுவைப்பணம் மங்கு
தருமினத்தோர்க்கு வேண வெகுமதிசெய்து
பொங்கத்தடனேவழுதி தன்புத்திரியுடன் கூடற்
பொன்னகரிற் சென்றிருந்தான் மன்னர்தொழவே.

---

விருத்தம்.

பாவிற்சேர் மாலைசூடும் பாண்டியன் மதுரைக்கேகப்
பூவிற்சேர்ந்தாரர்வாழ்கப் புகழ்செய்யும் நாவில்வேலர்
கோவிற்சன்னிதியில்நிற்கும் கொடிமரத்துடனேவந்த
காவிற்தேவதைகள்செய்யும் காட்சியைக் கழறுவேனே.

வேறு சந்தம்.

அடர்ந்தகொடிமரத்தாற் கூடித் தொடர்ந்ததெய்வமூரத்தால்
அங்கேவந்தஜனங்கள் மனை யெங்கேயிந்தயினங்கள்
கடந்துவிடுமென்று பேசிப் படந்தங்கேசென்று
கதறிக்கொண்டுகூடிப் பேய்க ளூதறிநின்றுதேடி.

சிற்றப்பசியாலே வரு மீற்றுப்புலிபோலே
சிறிச்சினமேபெறித ரள் கூறிக்கோலமாறி
கூற்றைப்போலேயிருந்து வந்து காற்றைப்போலேபுகுந்து
கோட்டைப்போலவளைந்து அவர் வீட்டைக்கண்டுநுழைந்து

பாலிகளைமார்தழுசென்ற குலிகளைமோதும்
பாவையரைக்கன்னிப் பருவப் பூவையரைமுன்னி
வாலர்களைவிளையாடும் பாலர்களைக்களை
மாட்டைக்குடிகன்றைச் சிடை யாட்டைவண்ணிகண்டே

காந்தலுறுக்காச்சல குளிர் சேர்ந்தகளிபிச்சல்
களைப்புலிக்கல்பொருமல் மெய் யிளைப்புடனெயிருமல்
மாந்தம்வயிற்றினுநம் வலியார்க் கவிப்புருகியுடன்
மலைவாரிடபிணிபால் மனவலைவாய்த்தினமெலிவாய்

அல்லும்பகல்பலரைத் தேடிவந்து கொல்லுமதிற்சிலரை
யடிக்குந்தடியெடுத்தே சிலரைத் துடிக்குப்படியடித்தே
கல்லுமணலுவாரி யக்கு செல்லுஞ்சிலரைமீறி
கதரிக்கனவுகண்டு சிலரைப் பதரச்செய்வதுமுண்டு

தடியுமுடியுமாக வந்து படிவிற்சிலர்க்காக
தலையைச்சுற்றியாடப் பலங் குலையச்சிலரோட
விடியுமட்டுஞ்சிலரைக் காகூவென மடியச்செய்யுப்பலரை
விராகவாற்றின்மேல முளைத்த கோரையதுபோலே

மடிந்துகால்மாடுதலை மாட்டாக முடிந்திடக்கண்டகொலை
வனுவனுட்டிசெயப் பார்கனுக் குகனுளத்திற்கிருபைவைத்து
தடிந்தவதைசெய்வீர சங்கிலி யடர்ந்தபூதனுதார
தச்சகனென்றதுகண்டு மாடன் முச்சந்தியைவாவென்று

நமக்காய்க்கொடிபரமோ வங்சோர தமைக்கொள்வதுந்திரமோ
ஞாயமல்லயிற்றன்று காரண செயன்முனிவுகொண்டு
உமக்காய்க்குற்றம்பொருத்தோமுங்கள் தமக்காயுயிரளித்தோம்
வும்பரின்றுமுதலும் நமதுசக் கம்பத்தடியதிலும்

மேலக்கோபுரமாட்டிலும் நம்பள் கோலத்தோடிமூட்டிலும்
வீதியிலுகின்றதிமேல கொண்டு சேதப்படுத்தாமலே

ஞாலத்தோர்புகழினக்கர் தல் தானத் தாரிவர்களைக்கர்
நலமாகவேசேர்ந்து வெகு பலமாய்க்களிகூர்ந்து
அருமைத்திருப்பணிகள் செய்து வரும்வேலாயுதச்சிவனை
யாசித்தவல்பாவிலும் தேவ தாசியர்பின்மாலிலும்
வருங்கொத்தமாருள்ளிலும் மந்த சருவாங்காசாரியில்லிலும்
வாதவர்தமதிடத்துந் திருப்புக ழோதுவாரவரிடத்தும்
ஒருமைத்தலநிலைகொண் டுங்க ளருமைக்கிளையுடன்கண்
டொருமொருவருஷங்கண்டு அவர் தருவதைவாங்கியுண்டு
கெருவங்கொண்டுதள்ளாமல் நீங்கள் சொருபமாரிவில்லாமல்
கட்டிக்காத்துவருவீ ரவரவர் வட்டித்ததைப்பெறுவீர்
சுகமாகப்போயிருக்க சிவ சண்முகன்றிருநீறளிக்க
தலைநிந்துபாதத்தில்வீழ்ந்து பேய்கள் பணிந்துயெழுந்திருந்து
அகநோக்கித்திரும்பிவந்து அவரவ ராசபாரங்கள்தீர்ந்து
அசுட்டையுள்ளபெயரை முன்போல மசக்கையாக்குமவரை
இடுக்குங்கூடையோர்டாலுங் கையிலெடுக்குமாத்திரைக்கோலும்
யேத்திமலைக்குறத்தி வாப் பார்த்தூசாருமறித்து
அடுக்கவரவழைத்துக் கையி லெடுக்குநிதி கொடுத்து
அங்கேகுறிகேட்டா ரவர் தங்கள்பட்ட பாட்டால்
பேசுமலைக்குறத்தி குறி நேசமுடன்பரத்தி
பின்னமொன்றில்லைமண்ணில் நீங்கள் முன்னமேமலையதனில்
தேசுதேர்க்குவடமும் மருமா யில்லாக்கொடிமரமும்
தோரச்சதற்குமூர்த்தி நீர்நீ காரிச்சுவெட்டவந்தீர்
அந்தமரத்துடனே கூடி வர்தத்தெய்வக்கடனே
அலக்களிவானதுமே கண்டு குலைச்சல்பண்ணுதினிமேல்
பந்தமுடன் துணையில் நீங்களார் பங்காகவேமனையில்
பகிர்ந்துபீடம்போட்டால் மன மகிழ்ந்துகளியாட்டால்
வில்லுமூாசுமொத்தார் பணமிட்டுச் செல்லுங்குடைகொடுத்தால்
வேணசெல்வமளிப்போ மென்றுங் காணத்தோணத்துதிப்போ
சொல்லுங்குறிக்கிணங்கிக் குறத்தியை நல்லதென்றுவணங்கி (ம்
துகையரய்பூசணமீய்ந்தார் கட்டி நகையாயுளமகிழ்ந்தாள்

---

## கலிப்பா.

கேரங்கருப்பு போற்றேற்றுங் கொங்கைக்குறத்திருதி
பாங்குடனே யெல்லவரும் பரிவாகக்கேட்டுகந்து
நீங்காமனிற்குமந்த நிலைகுறித்துப் பிட்டபிட்டு
ஒன்றுமலைத் தேவதைகட் கூட்டுக்கொடுத்தனளே

---

## வேறு சந்தம்.

மாலோர்புகழும்பிமானன் வட
மலைகார்க்கும் வாசர்ப்ரதானன்
பூலோகப்பணிந்திடு பெஞ்ஞானன் ஞான
போதகன்சங்கிலிப்பூதன் வாராண்டி

விரித்தசெஞ்சடைசுத்தியாட காலில்
வீரச்சிலம்பிசைகள் கூட
புரிந்தவல்லினைபுங்கண்டோம் ஞான
போதகன்ச..கிலிப்பூதன் வாராண்டி

நன்னியபமகல்வார்கள்கண்டன் சிவ
நந்திகணப்பிறந்த வுததன்டன்
புண்ணிய சண்டப்ர சண்டன் ஞான
போதகன் சங்கிலிப்பூதன் வாராண்டி

குவியாதவர்மேற் கோபங்கொண்டு மார்பில
கோடாகோடிதலை மாலைபூண்டு
புவிமீதிலடியாரையாண்டு ஞான
போதகன் சங்கிலிப்பூதன் வாராண்டி

பயில்வாணர்கவிச்சிந்துபாடி நல்ல
பட்டுடைமேல் வெண்துப்பட்டி மூடி
அயில்வேலன்பெயரைக் கொண்டாடி யெங்கள்
ளண்ணுவிமுச்சந்தி மாடன் வாராண்டி

வன்னியன் பகடை முன்னோடி வனு
    வண்டனிருள னுதரண்டன் கூடி
துன்னியாடனம் கொண்டாடி சிவ
    தொண்டன் சடலையின் முண்டன் வாராண்டி

மார்பிலணிபொற் பூணநூலு மரு
    ளாணும்பல் சிலப்பிட்ட காலும்
சார்பினர்க்கருவிடமென் மேலும் வரந்
    தருஞ்சிவனைஞ்சபெருமாள் வாராண்டி

மாடத்தி சாமுண்டி குவிப்பேச்சி மக
    மாயிபிர்மராச்சதையாக்ஷி
தாடகத்தியுடனையங்காக்ஷி சுட்டந்
    தருஞ்சிவனைஞ்சபெருமாள் வாராண்டி

யென்னுகூத்தமிழ் வாணர்கள்படி துதித்
    தேற்றக்கோமாரங்கொண்டு நின்றாடி
அன்னூறுபங்காகவேகூடி வாட்டிட்
    டானந்தக்களிப்புத் தந்தார்கள் நாடி

வட்டிட்டநாள்முதலாக யாரு மூங்கி
    லாத்திபோல் விர்த்தித் தெல்லோரும்
கூட்டிட்ட செல்வமும் பெருஞ்சீரு மலைக்
    குமாரனருளால் வாழுதே யூரும்

செந்திற்பதிபின் குகன் வாழி வள்ளி
    தெய்வானை நவவீரர் வாழி
சுந்தரமும் மூர்த்திகளும் வாழி கம்பத்
    துடன்வந்த தெய்வமெல்லாம் வாழி

வாத்தியக்காரர்களும்வாழி இசை
    வாசித் தறிந்துரைப்போர் வாழி
தோத்திரத்தமிழ் மாரனும்வாழி மற்றத்
    தொழிலோரெழியோரும் வாழி

கொடிமரக் காவியமிதும் வாழி கவி
கூறுமருணகிரிசொல்வாழி
படியுறுமுயிர்க ளெல்லாம்வாழி இதைப்
படிப்போர்கேட்போரும் வாழிவாழியே.

---

வெண்பா

சந்தவரை வேலவர்க்குச் சந்தனப்பொற் கம்பமது
வந்தகதை யான்றெரிந்த பட்டாரசர்—திந்தப்
பெருநிலத்தில் யானுரைத்தே போனசைகொண்டு
வருநிலத்திற கேட்போர்க்கு வந்து.

---

வாழி.

விருத்தம்.

விற்குட முடுக்கு தாளம்
விசுகோல சிங்கி வாழி
யற்குண ஸதநகிசைக்க
பக்கப்பாட்டினரும் வாழி
மற்புறப்படித்துக் கேட்க
வந்திருந்தவரும் வாழி
நற்புகழுளித்துகந்த
நண்பரும் வாழிமாதோ

---

கொடிமரக் காவியம் முற்றிற்று.

---



# தெரிசவனப் பதம்.

துசாவந்தி—அடதாளம்.

பல்லவி.

இந்தவேளை யென்றன் முன்வருவாய் புக
ழெத்திசையு நித்தந்துதி
சத்தியருள் புத்திரனே (இந்த)

அநுபல்லவி.

செந்தில்மாநகர் வந்திருந்தாண்டிடும் வேலா
ரீ ரீ ரீ ரீரீ செந்
அந்தரர் முனிவோ ரேத்திடுஞ் சீலா
ஐயா ஐயா பன்னிரு கையர் (இந்த)

சரணங்கள்.

பாதி மதி யணி ஆதி சிவன் மகனே நிதம்
பரமதி லொரு கரந் திரு நடம் புரிந்தருள் (பா)
கோதிலா தமிகு தேவகுஞ்சரி திருத் தோழா
ரீ ரீ ரீ ரீரீ கோதி
சீதமானருள் வள்ளிமணாளா
தீரா தீரா சூரசம் மாரா (இந்த)

மா மயி லேரிய சாமி சண்முக குகனே இந்த
மண்டலமுள் தொண்டருளங் கண்டுகொண்டு தெண்டனிட
காமன்தனக்கிசைந்த நேமமைத்துனரான பாதா
ரீ ரீ ரீ ரீரீ காமன்
யேமன் வந்தணுகி டாதருள்கந்த நாதா
ஈசா ஈசா திருமுரு கேசா (இந்த)

கிரிகையக் குடை பிடித்த அரியின் மருமகனே மணி
கேயனைய சேயனுவந் தாயர்க்குச் சகாய மீய (கிரி)

சிறியசுப்பிரமண்யன் அதிகவி யிதன்பொருள் கேட்டு
ரி ரீ ரீ ரிரீ சிறிய
வறுமை பிணியதனை வடிவேலா லோட்டு
வந்தாள் வந்தாள் பதமலர் தந்தான் (இந்த)

---

## சிறப்புக்கவி.

### கலித்துறை.

கார்மறந்தாலு மறவாது காசினி காட்டகத்தைத்
தார்மறந்தாலு மறவாது வண்டினம் தண்டமிழைப்
பார்மறந்தாலு மறவாத முத்தையா பண்டிதனை
யார்மறந்தாலு மறவாதிருக்குமென் னன்னெஞ்சமே

### விருத்தம்.

திருமாலுருப் பத்து நவமணி யொன்பது
திக்க தெட்டு
வருமாசரமேழு சாஸ்த்திரங்க ளாறு
மலர்களைந்து
தருமாரணநாலு செந்தமிழோர் மூன்று
சாதிரண்டு
உருவான திருமந்த்ர நகாரமுத்தையா
உரைப்பதொன்றே.

---



உ

இந்நூற்குடைய

தி. ஒ. சுப்பிரமணியபண்டிதர்.

இயற்றிய

# புத்தக விளம்பரம்.

| | | ரூ | அ | பை |
|---|---|---|---|---|
| திருச்செந்தூர் வழிநடைப்பதம் | விலை | 0 | 1 | 6 |
| மோகனாங்கிவிலாசம் | ,, | 1 | 0 | 0 |
| திருச்செந்தூர் ஆறுமுகக்கடவுள்பதிகம் ,, மதுரை வாலேசர் பதிகம் ,, திருமண வூஞ்சல் ,, | | 0 | 2 | 6 |
| வயிரவசெட்டியார் கும்மி | ,, | 0 | 2 | 6 |
| முன்னேஸ்பரம் வழிநடைப்பதம் | ,, | 0 | 2 | 0 |
| திருச்செந்தூர் அஸ்டபந்தன அலங்காரச் சிந்து கும்மி | ... | 0 | 1 | 6 |
| ஷை 2-ம் பாகம் | ,, | 0 | 1 | 6 |
| புலையன்கதை வில்லடிப்பாட்டு | ,, | 0 | 6 | 0 |
| ஷை 2-ம் பாகம் | ,, | 0 | 6 | 0 |
| கொடிமாக்கவி வில்லடிப்பாட்டு | ,, | 0 | 5 | 0 |

இங்ஙனம்

தி. ஒ. சு.

---

## அச்சிடுவோர்க்கு அறிக்கை.

வெண்பா.

என்னுகவி யல்லாது இப்புவியி லிக்கவிதை
தன்னையச்சி லிட்டுவிற்கத் தான்முயலு—மன்னவர்கள்
அவதனைக் கங்கை யணிகரையிலே வதைத்த
பாவமதே வந்தணுகும் பார்.